SRI C. NATARAJA ODAYAR : சமீபத்தில் ஹரிஜனங்களுக்காக கட்டப்பட்ட வீடுகள் குறுகிய அளவாக இருக்கின்றன. ஓடு போடுக்கட்டுவதன் காரணத்தால் அதிகச செலவும் ஆகிறது. ஓடு போடுவதற்குப் பதிலாக கூரையாகப் போட்டால், ஒன்றுக்கு இரண்டு மடங்கு வீடுகள் கட்ட முடியும் என்று அரசாங்கத்திற்குக் கூட எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே, கூரை போட்டுக் கட்டுவதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : கூரை போட்டுக் கொள்வ வதினால் ஹரிஜனங்களுக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, கூரை போடாமல் ஓடு இருப்பது நல்லது.

SRI M. K. SOMASUNDARAM : வீடு கட்டுவதை கண்டிராக்டரிடம் விடுவதால், கண்டிராக்டர்கள் லாபத்தில் கருத்துடையவர்களாக இருந்து சரியான முறையில் வீடு கட்டப்படாத நிலைமை ஏற்படுகிறது என்ற புகார் வருகிறது. ஆகவே, யார் வீடு வேண்டுமென்று கேட்கிறார்களோ, அவர்களிடத்திலே பணத்தைக் கொடுத்து அவர்கள் மூலமாகவே வீடு கட்டிக் கொள்வதை அனுமதிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது ஜில்லாவிலே கட்டப்படும் வீடுகளெல்லாம், வீட்டில் குடியேறப் போகிறவர்களே கட்டிக் கொள்ளலாம் என்ற முறையில்தான் திட்டம் வகுத்து இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்திருக்கிறோம். அவரவர்களே கட்டிக் கொள்ள முடியாதபட்சத்திலே தான் காண்டிராக்டுக்கு விடும்படி சொல்லியிருக்கிறோம்.

### *Housing Schemes for Harijans*

* 722 Q.—SRI W. P. A. R. CHANDRASEKARAN AND SRIMATHI A. S. PONNAMMAL : கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

ஹரிஜனங்களுக்கு வீடு கட்டும் திட்டத்தில் ஒரு வீடு கட்டுவதற்கு ஒதுக்கியுள்ள ரூ. 850-ல் சர்க்கார் மான்யம் ரூ. 750 என்றும், கட்டிக் கொள்பவரின் பங்கு ரூ. 100 என்றும் வைத்து வீடு கட்டும் திட்டத்தை சர்க்கார் மாற்றியமைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRIMATHI A. S. PONNAMMAL : கனம் சபாநாயகர் அவர்களே, ரூ. 550 கொடுத்து வீடு கட்டுவதால் மழை காலங்களில் வீடு விழுந்து விடுகிறது. ஹரிஜனங்களுக்குச் செய்யும் நன்மை நல்லமுறையிலே போய்ச் சேரவேண்டுமானால், ரூ. 550 ஐ, ரூ. 750 ஆக உயர்த்தவேண்டும். நிதி அமைச்சர் அவர்களையும் தயவு செய்து கலந்தாலோசித்து, இன்னும் அதிகப்படியாக ரூ. 250 உயர்த்திக்கொடுப்பதற்கு மறுபடியும் பரிசீலனை செய்ய முடியுமா என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : இது கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய அபிப்பிராயத்தைப் பொறுத்திருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR : பெரிய பெரிய அணைகளையெல்லாம் தற்கால இன்ஜினீர்கள் மண்ணால் கட்டிவிடும்போது, வீடுகளையும் தக்கபடி மண்ணால் கட்டுவதற்கான வழிமுறைகளைக் கண்டுபிடித்து, எல்லா ஹரிஜனங்களுக்கும் நல்வாழ்வு தருவதற்கு அவர்களால் ஏற்பாடு செய்ய முடியாதா ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் இதற்கு முந்திய கேள்வியின் மேல் உபகேள்வி கேட்கிறார். நாம் அடுத்த கேள்விக்கு வந்துவிட்டோம். இப்போது 723-ம் எண்ணுள்ள கேள்வியை எடுத்துக்கொள்வோம்.